# மாயாஜால நூடுல்ஸ்



- இந்திரா ஸ்ரீவத்ஸா



கிழக்கில், காலையொளியின் முதல் கதிர்கள் எழுவதற்கு முன்பு, சிறுவன் ஒருவன் இருளில் எழுந்தான். “நான் இன்று மலையின் மேல் ஏறமாட்டேன்” என்று கெஞ்சினான். அவன் கண்களில் தூக்கம் தெரிந்தது.

"நாம் இராமன் நூடுல்ஸ் கடையில் சாப்பிட உச்சிக்குச் செல்கிறோம்," என்று அவனது தந்தை கூறினார்.



"ராமன் நூடுல்ஸ் கடையா?", என்று அவன் கேட்டான். திடீரென்று, அவரன் சோர்வு நீங்கியது. "நாம் இன்று மாயாஜால நூடுல்ஸ் சாப்பிடப் போகிறோமா?"

அவன் தந்தை தலையசைத்தார். "ஆம். இன்று நாம் ஃபுஜி மலையில் ஏறும் நாள்!", என்றார்.

சிறுவயதில் இருந்தே, ராமன் நூடுல்ஸ் கடையில் மாயாஜால நூடுல்ஸைப் பற்றி சிறுவன் கேள்விப்பட்டான். அவன் தனது வாழ்நாள் முழுவதும் அந்த மாயாஜால இடத்தைப் பற்றி கனவு கண்டான்.



அவனது கனவில், அவன் தங்க நூடுல்ஸைப் பார்த்தான்; மற்றும் சூடான, மசாலா சூப்பை சுவைத்தான். அவன் மாயாஜால நூடுல்ஸை சாப்பிட்டதால், அவன் பெரிதாகவும், வலுவாகவும் மாறினான்.



மவுண்ட் ஃபுஜிக்கு செல்லும் பாதை இருளாகவே சென்றது.

அவர்கள் மலை அடிவாரத்திற்கு வந்தபோது, அங்கு கூட்டமாக இருந்தது. அவனது தந்தை சில பொருட்களை வாங்கினார்: தண்ணீர், நூடுல்ஸ், முட்டை மற்றும் பழங்கள்.

“எனக்கு இப்போதைக்கு நூடுல்ஸ் எதுவும் வேண்டாம்," என்றான் சிறுவன். "நான் மாயாஜால நூடுல்ஸ்ஸை, உச்சியை அடைந்தவுடன் சாப்பிடுவேன்" என்றான்.

"உன் விருப்பம் போலவே" என்று அவன் தந்தை கூறினார்.





அவர்கள் ஏற ஆரம்பித்தனர். மலையேற்றத்தின் முதல் பகுதி எளிதாக இருந்தது. சிறுவன் தன் தாய் கற்றுக்கொடுத்த பாடலை முனுமுனுத்தபடியே மலையேறினான்.

உச்சியில், மாயாஜால நூடுல்ஸ்ஸின் மணம் வீசுவதாக அவன் கற்பனை செய்துகொண்டான்.



விரைவில், பாதை செங்குத்தானது. சிறுவனுக்கு பசி ஆரம்பித்தது. மலை அடிவார முகாமில் தந்தை வாங்கிய முட்டைகள் மற்றும் பழங்களில் சிலவற்றை அவன் சாப்பிட்டான். ஆனாலும் அவன் நூடுல்ஸ்ஸை சாப்பிட மறுத்துவிட்டான்.

அவன் மேலே உள்ள மாயாஜால நூடுல்ஸ்ஸை மட்டுமே சாப்பிட விரும்பினான்.



சூரியன் தலைக்கு மேல் உச்சியில் தோன்றியது. அது மதியம், ஆனால் ஃபுஜி மலையின் சிகரம் எங்கும் தென்படவில்லை. சிறுவனின் கால்கள் சோர்வடைந்தன. அவன் நடப்பதை நிறுத்திவிட்டு, அமர்ந்தான்.

“போகலாம், அந்த நூடுல்ஸ் நமக்காகக் காத்திருக்காது” என்று அவனுடைய தந்தை சொன்னார்.

"நான் மிகவும் சோர்வாக இருக்கிறேன்," என்று அவன் கூறினான், "நான் வீட்டிற்கு செல்ல விரும்புகிறேன்."



தந்தை அருகில் அமர்ந்தார்.

"மகனே, இந்த உலகில் எளிதான விஷயங்களும் உள்ளன, கடினமான விஷயங்களும் உள்ளன," என்று அவனது அப்பா கூறினார். "ஒரு நாள் நீயும் ஒரு ஆண் மனிதராக வளர்வாய்!, அதற்க்கிடையில் நீ தேர்வு செய்ய வேண்டும். மீண்டும் கீழே செல்வது எளிது. இது உனக்கு எதுவும் உதவாது. நீ உச்சியை அடையாவிட்டால், நீ ஒருபோதும் மாயாஜால நூடுல்ஸ்ஸை வெகுமதியாகப் பெற மாட்டாய்."



"அவை எப்படி இருக்கும்?", என்று மீண்டும் அவன் கேட்டான்.

"ஒவ்வொரு நூடுலும் தங்கத்தால் ஆனது, மற்றும் அவை முடிவடைவதில்லை", என்று அவரது தந்தை கூறினார். "நீ அதை நாள் முழுவதும் சாப்பிடலாம். மேலும் அது உன்னை முன்பை விட உயரமாகவும் வலிமையாகவும் ஆக்கும்." அவருடைய மகன் தலையசைத்தான். "தொடர்ந்து செல்வோம்," என்று அவன் கூறினான்.



மேலும் சில மணிநேரம் கடந்தது. சிறுவன் வலுவாக இருக்க முயன்றான், ஆனால் அவனது கால்கள் கனமடைந்தன. அவன் உடல் சோர்ந்தன. சிறுவன் இறுதியாக சரிந்தான். அழ ஆரம்பித்தான்.

"மன்னிக்கவும் அப்பா," என அவன் கூறினான், "என் கால்கள் வலிக்கிறது. என்னால் மேலும் செல்ல முடியாது. நான் மந்திர நூடுல்ஸுக்கு தகுதியானவன் அல்ல" என்றான்.



அவனுடைய அப்பா கோபமடையவில்லை. உண்மையில், அவர் பெருமையாகத் இருந்தார். "ஒருவேளை, நான் உனக்கு மிகவும் கடினமாக வேலை கொடுத்தேன்! இன்று நீ நன்றாக செய்தாய் மகனே!"

"ஆனால் நாம் எப்படி மலையின் உச்சியை அடைவோம்?", என்று அவன் கேட்டான்.

"நான் உன்னை சுமந்து செல்கிறேன்," என்று அவனது தந்தை கூறினார்.



மகனைத் தன் முதுகில் சுமந்துக் கொண்டபடி தந்தை நடக்க ஆரம்பித்தார்.

அவனது தந்தை கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் நடந்தார். பிறகு அவரும் சோர்வடைந்தார். அவன் தந்தை தடுமாறினார்.

"இவ்வுலகில் எளிதான விஷயங்கள் மற்றும் கடினமான விஷயங்கள் உள்ளன," என்று சிறுவன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.



சிறுவன் தன் தந்தையின் முதுகில் இருந்து குதித்து அவர் கைகளைப் பிடித்தான். அவன், தன் அப்பாவை பின்னால் இழுத்துக்கொண்டு ஓட ஆரம்பித்தான்.

"இப்போது வாருங்கள்! மேலே மேலே மேலே!", என்று அவன் சத்தமாக கூறினான். அவனது கால்கள், முதுகு மற்றும் தலையில் காயம் ஏற்பட்டது. ஆனாலும் அவன் இப்போது நிறுத்த முடியாத அளவுக்கு நெருக்கமாக நடந்தான்.

பிறகு அவன் பார்த்தான்!!!...




ராமன் நூடுல்ஸ் ஒரு சிறிய மர கட்டிடம். அது பழையதாகவும் மற்றும் தேய்ந்ததுமாய் காணப்பட்டது. அவன் திரும்பிப் பார்த்தான். அவரது தந்தை பெருமையுடன் சிரித்தார்.

பின்னர், இருவரும் ஒன்றாக மாயாஜால நூடுல்ஸ்ஸை சாப்பிட செய்ய உள்ளே சென்றார்கள்.



பல ஆண்டுகளுக்குப் பிறகு, கிழக்கில் சூரிய ஒளியின் முதல் கதிர்கள் எழுவதற்கு முன்பு ஒரு சிறுவன் எழுந்தான். “இன்று ஏறவேண்டாம்”, என்றான் தூக்கத்தில். "நாம் இராமன் நூடுல்ஸ்ஸை சாப்பிடப் போகிறோம்," என்று அவனது தந்தை கூறினார்.

“இன்று நாம் ஃபுஜி மலையின் உச்சியைக் கைப்பற்றுவோம்" என்றார். அவர், ஒரு சிறுவனாக இருந்தபோது, மாயாஜால நூடுல்ஸ்ஸை சாப்பிட்ட தன் தந்தையுடன் சென்றதை, இன்னும் அவர் நினைவுக் கொண்டார்.

